ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய

# ஸ்ரீ பஜகோவிந்த ஸ்தோத்திரம்

( மோஹமுத்கரः )

தமிழாக்கம் :

'' தேவீதாஸன் ''

ஐ. ஜி. இராமநாதன்

வெளியிட்டோர் :

ஸ்ரீ பக்த ஸமாஜம்

மேலமாம்பலம், சென்னை-33

# ஸ்ரீ பஜகோவிந்த ஸ்தோத்திரம்

(மோஹமுத்கர꞉)

தமிழாக்கம் :

"தேவீதாஸன்"

ஐ. ஜி. இராமநாதன்

வெளியிட்டோர் :

ஸ்ரீ பக்த ஸமாஜம்

மேலமாம்பலம், சென்னை-33

## முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கரர் பெருமான் முப்பத்திரண்டும் முடிவுருத சிறு வயதில் சாதித்தனவற்றைக் கண்டு மனித குலம் என்றும் வியக்கும். போக்கு வரத்து இல்லாத ஒன்பதாம் நூற்றுண்டுல் பாரதத்தை பாத யாத்திரையாகச் சுற்றி ஐந்து இடங்களில் மடங்களை நிறுவி, வேத, ஆகம, தந்திர வல்லுநர்களைக் கண்டு, விவாதித்து, தனது அத்துவிதக் கொள்கையின் சிறப்பினை நிலை நாட்டிய உன்னத மஹான் அவர்.

பாமர மக்களிலிருந்து ஞானம் பெற்று பக்குவமடைந்தோர் வரை விளங்கும் மனித குலம் இறை யுணர்வினை பலபடியாகப் பெறுகின்றது. பாமர மக்களுக்கு ஏற்பட்ட துதிபாடல்களைப் பாடி பரவச மடைந்து உணர்வினைப் பெறும் வழியும், ஞானமடைந்தோர் கடைபிடிக்கும் வழியும் வேறுபட்டன. நோக்கம் ஒன்ருக இருக்குமாயினும், கையாளப்படும் சாதனைகள் பல வகைப்பட்டன.

துதிப்பாடல்களைப் பாடி பக்திக் கடலில் திகழ்ந்து இருத்தல், ஆலயத்திற்கு 'சென்று தொழுது இறையுடன் ஒன்றியிருத்தல், யோகப் பயிற்சியில் நின்று குண்டலினியை எழுப்பி இன்ப அலைப் பெருக்கில் ஆழ்ந்

திருத்தல், ஞானம் பெற உலக மக்கள் யாவரும், பரம் பொருள், அவனன்றி ஒன்று மில்லை என்ற பெரு உணர்விலே திளைத் திருத்தல் போன்ற அநுபவங்கள் வேறு படுகின்றன.

'பஜ கோவிந்தம்' என்ற துதிப்பாடல் 'பஜனை' என்று அழைக்கப்படும் கூட்டு வழி பாட்டிற்கு உகந்தது. பலர் கூடி ஒரு மித்து வாய் விட்டுப் பாடி பரவசமடைந்து இறையுணர்ச்சியினை நுகர வழிகோல ஏற் பட்ட பாக்கள் ஆகும். பலர் கூடி எழுப்பும் இசை நாதத்துடன் பாடுகின்றோர் மனங்கள் கூம்பும்போது, பாடுகின்ற இடத்திலே மறைந்து இசையினை கேட்டு இன்புற்று மாணிக்கமாக ஒலிக்கும் இறையினை உணர முடிகிறது.

பெறுதற்கரிய மானிடப் பிறவி பெற்றும் தன்னைத் தானே யறிந்து கொள்ளாமல், உலக ஆசைகளினின்று விடுபெறாமல், பெறுதற்கரிய பிரான் அடி சேராமல் இருப் பது அல்ல என்றும், பண் சுமந்த பாடல் களினால் ஆதிசங்கரன் பெருமான் எடுத்துக் கூறுகின்றார்.

அந்த மூல காவியத்தின் இசையும் பொருளும் பிறழாவண்ணம் தமிழ்க் கண்ணி களில் வடித்துத் தந்திருக்கிறார் ''தேவீ தாஸன்'' ஸ்ரீ. ஐ. ஜி. இராமநாதன். அம்மை யைப் பற்றிய பாடல்கள் ஏற்கனவே பல இயற்றி அன்பர்களைப் பரவசத்தில் ஆழச் செய்துள்ளார்.

ஆதிசங்கரர் பெருமானின் பாடல்களை ஸம்ஸ்க்ருதம் அறிந்திலரும் ஆதிகாவியத்தின் இசையினைப் பாடியும், கருத்தினைச் சுவைத்தும் இன்புறச் செய்யும் இம்முயற்சி பெரிதும் போற்றத்தக்கது. மேலும் மேலும் இது போன்ற நூல்களை இயற்றும் உணர்வும், அருளும் பாலிக்கும் வண்ணம் ஆதிசங்கரனின் பொன்னார் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

ஜயசந்த்ரன்
(அடியார்க்கு நல்லான்)

சென்னை-28

ஸ்ரீ

## பதிப்புரை

ஸ்ரீசங்கர பகவத்பாதர் அருளிய ஸ்தோத்ரங்கள் பலவற்றுள் ''பஜ கோவிந்தம்'' அல்லது ''மோஹ முத்கரம்'' என்பதும் ஒன்று. இது எளியநடையில் ஆழ்ந்த கருத்துக்கள் செறிந்து விளக்குவது. இச் சிறிய ஸ்தவத்தை ஆண் பெண் அனைவரும் சிறியவர் களாயினும், பெரியவர்களாயினும் மனப்பாடம் செய்து இசையொலியெழுப்பி நமது நாட்டில் பாடி வருவதையும் காணலாம். இச்செய்யுட்கள் யாவும் இசைமுறையினைத் தழுவியே இயற்றப் பெற்றனவு மாகும்.

ஸ்ரீசங்கரர், வாழ்க்கையில் பலபடியான துக்கங் களை யநுபவித்து, கரைசேரவழியறியாது, அறிவு வளர்ச்சிகுன்றியுள்ள மக்களைக் கருத்திலே கொண்டு, அவர்கள் பகவத்பஜனை செய்தாவது உறுதியுட னிருந்து வருவதற்குத் துணையாகவே எளிய நடை யிலே இவைபோன்ற நூல்களை இயற்றினர் போலும்.

இங்கு ''பஜ கோவிந்தம்'' 'கோவிந்தனை பஜனை செய்வாயாக' என ஒவ்வொரு செய்யுளின் ஈற்றில்

" த்ருவபதமாக " ஓர் அடியையமைத்து, வாய்மொழி யாகவும், யாழ்போன்ற கருவிகளின் வழியாகவும் இசைக்கத் தக்கவாறு பொருத்திக் கொடுத்துள் ளதும் கவனிக்கத்தக்கது.

மற்றும், 'பஜனை' என்பது " பஜ ஸேவாயாம் " என்ற தாதுவிலிருந்து தோன்றியது. அதற்கு ஸேவிப்பது எனவும் பொருளுண்டு. ஸேவை யென் பது ஆராதனையுமாகும். அதாவது ஸ்ரீபகவா னுடைய அநந்தகல்யாண குணங்களை வாயாரச் சொல்லித் தன்னையும் மறந்து, அக்கல்யாண குணங் களில் மனதை நிலைக்கச் செய்து, அவனுடன் ஒன்றி யிருக்கப் பழகுவதும் ஸேவையேயாகும் என்பது ஆன்றோர் கண்ட துணிவு. இதையே நாமஸங்கீர்த் தநம் எனவும் அழைப்பர்.

இது, சிறு நூலாயினும் இரண்டு பகுதிகள் கொண்டு விளங்குவது. முற்பகுதியை, " சர்பட பஞ்சரிகா ஸ்தோத்ரம் " என அழைப்பர். இது பதினேழு செய்யுட்கள் கொண்டதாகும். பிற்பகுதி பதின்மூன்று செய்யுட்கள் கொண்டதாகும்: இதை " த்வாதபஞ்சரிகா ஸ்தோத்ரம் " என அழைப்பர். இவ்விதமே கோரக்பூரிலும், சென்னை சாஸ்தர ஸஞ் ஜீவிநீ பிரஸிலும் அச்சாகியுள்ளது. " மோஹமுத் கரம் " என்ற பெயரில் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸத் தில் ஒரே பகுதியாக அச்சாகியுள்ளது.

இப்பொழுது மூதல் நூலைத் தழுவிய தமிழாக்கம் வெளிவருவது ஸ்ரீவாணீவிலாஸத்தின் பதிப்பைத் தழுவியது. தமிழாக்கம் செய்தவர் அருட்கவி ஸ்ரீராம நாதர் அவர்கள். இவர் தெய்வத்தன்மை வாய்ந்த

பல கவிதைகளைக்கொண்ட நூல்கள் பல வியற்றி யுள்ளார். அவைகளில் இதுவுமொன்று. மூலத்தின் யாப்பைத் தழுவியே தமிழிலே அழகிய நடையிலே கண்ணிவடிவாக அமைத்துக் கொடுத்துப் பொழிப்புரையும், மேற்கோள் விளக்கங்களும் கொடுத்துள்ளது இவரது கவியியற்றும் திறனைப் பெருதும் புலப்படுத்தும். இதைப் படிக்கும் அறிஞர் அனைவரும் இதை உணரலாகும். இவருடைய தொடர்பு எங்கள் ஸமாஜத்துக் கிடைத்ததும் கண்ணன் கருணையின் நிறைவின் பெருமையேயாகும்.

இந்நூல், சிறியதேயாயினும், மக்களுடைய தினஸரி வாழ்க்கையிலே தோன்றும் பலவகை இன்னல்களுக்கு இலக்காயுள்ள ஆசையின் வேட்கை, பொருள் வரவில் பற்று, ஆசையின் வலிமை, அதற்குரிய பரிஹாரம், இளமை நிலையாமை, மூப்பு, இவைகளிலே தோன்றும் மனோவிகாரங்கள், அவைகளைக் களைவதற்குரிய வழிகள், ஆசையின் பாகுபாடுகள், காமவேட்கை, அதன் செயல், அதைக் களையுமுபாயம், பிறவியின் பயன், ஸத்ஸஙக்த்வம், அதனுடைய வலிமை, மனைவி, மக்கள், சுற்றத்தார் இவர்களுக்குண்டாகும் பாசம், அப்பாசம் பனையக் கருதியே தோன்றுவது என்ற விளக்கம். ஸ்ரீபதி பஜநம் ஒன்றே விடுதலைக்குத் துணையாயுள்ளது, அது பிறவாப் பேரின்பத்தைப் பயக்கவல்லது என்பன போன்ற பல விஷயங்களை, எளிய முறையிலே சுருக்கமாக எடுத்து காட்டுவது சாலச்சிறப்புடைத்து. இதைப் படிக்கின்ற ஒவ்வொரு மனிதனும் ஊன்றிச் சிந்தித்தால் அவன் மனம் விடுதலையைப் பெற விழைவுகொண்டு வைராக்கியத்தை நாடுமென்பது உறுதி.

சென்னை பக்தஸமாஜம் சென்ற சிலஆண்டு
களாக இன்னோரன்ன கருத்தினைக்கொண்டு, பற்பல
சிறிய நூல் வெளியீடுகளின் வாயிலாக மக்களுக்கு
ஆஸ்திகத்தன்மை, கடவுள் பக்தி இவைகளைத்தன்
னலம் கருதாத் தொண்டாகச் செய்துகொண்டு,
மக்களிடையே பிரசாரம் செய்து வருவதை ஆஸ்திக
அன்பர்கள் அனைவரும் அறிந்திருப்பர். அவ்வழி
யிலே, இந்த ''பஜகோவிந்தம்'' என்னும் தமிழாக்
கமானது, ஸ்ரீகாஞ்சி காமகோடி பரமாசார்யாளு
டைய ஆசிகளைப் பெற்று, அவருடைய ஜன்மநக்ஷத்ர
தினத்தில் வெளிவருகின்றது.

எனவே, ஆஸ்திக அன்பர்கள் இந்நூலைப் படித்
துப் பொருளுணர்ந்து கண்ணன் கழலிணை யகத்தே
போற்றி, அவனுடைய கல்யாண குணங்களிலே
ஒன்றியிருந்து, கண்ணன் அருளுக்குத் தகுதியுள்ளவர்
களாகத் தங்களைச் செய்துகொள்ள வேண்டுகிறோம்.
ஆஸ்திக அன்பர்கள் ஸமாஜத்தின் இவை போன்ற
நூல்களை ஆதரிப்பதோடு, மேன்மேலும் தெய்விக
நூல்கள் தொடர்ந்து நடந்துவர முயற்சி செய்வார்
களாக.

பக்த ஸமாஜம்
மாம்பலம்
சென்னை-33

**வாதூல வே. ராமசந்த்ர சர்மா**

## அநுபந்தம் (க)

### செய்யுள் முதற்குறிப்பகராதி

## மேற்கோளாகக் கொண்ட நூல்களும் ஆசிரியர்களும் (உ)



## மேற்கோளாக் கொண்ட செய்யுளகராதி (ங)



—:o:—

# அரும்பத அகராதி

—:o:—

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

## ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்

காஞ்சீபுரம்

முத்திரை

## ஸ்ரீமுகம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்களால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்தின் அதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் உத்திரவின்படி ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் அவர்களினுல் கோயமுத்தூரை அடுத்த சுண்டப்பாளையம் கிராமத்தில் வஸிக்கும் ஸ்ரீராமநாதனின் பொருட்டு நாராயண ஸ்மரணம் செய்யப்படுகிறது.

இவ்வுலகில் அஜ்ஞான அந்தகாரத்தில் அகப்பட்டுத் திண்டாடும் ஜனங்களுக்கு ஆத்மஞானமாகிய ஒளியையளித்துக் காப்பாற்றுவதற்காக, பரமேச்வர அவதாரமாய் ஆவிர்பவித்து, ஷண்மதங்களை நிலை நிறுத்தி, பரமோபகாரம் செய்துள்ள ஸ்ரீபகவத்பாதாசார்யாள், ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்கள், ப்ரகரண கிரந்தங்கள், பல்வேறு தேவதைகளைப் பற்றிய ஸ்தோத்திரங்கள் இவைகளை அருளியிருக்கிருர்கள்.

இவைகளுள் பஜகோவிந்த ஸ்தோத்திரம் இந்த ப்ரபஞ்சத்தின் நிலையாமையையும், நிலைத்திருக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் தத்வத்தையும், பகவத் பக்தியின் மேன்மையையும் தெளிவாக்குகிறது.

இந்த ஸ்தோத்திரத்தை தமிழறிந்தவர்கள் பொருளுணர்ந்து படிப்பதற்கு ஸௌகரியமாயிருப்பதற்காக, தாங்கள் தமிழில் பாடல் ரூபமாக இயற்றியிருக்கும் மொழியெர்ப்பு மூலத்தின் சந்தத்திலேயே தகுந்த எதுகை மோனைகளுடன் அமைந்து மூலத்தின் கருத்துக்களை சுவை குன்றாமல் விளக்குகிறது. தாங்களே சுருக்கமான பொழிப்புரை குறிப்புரைகளையும் தகுந்த இடங்களில் பண்டைய தமிழ் நூல்களின் மேற்கோள்களுடன் எழுதியிருப்பது சிலாக்யமாயிருக்கிறது.

தமிழறிந்த ஆஸ்திகர்கள் இந்நூலின் உதவியுடன் பஜகோவிந்த ஸ்தோத்திரத்தைப் பொருளறிவுடன் படித்து கோவிந்தனை பஜித்து எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

யாத்ரா ஸ்தானம்<br>ஸ்ரீ சைல க்ஷேத்ரம்<br>பராபவ மாகபஹுள<br>சதுர்தசி

நாராயண ஸ்ம்ருதி

## முன்னுரை

வேதநெறி தழைத்தோங்கித் தெய்வமணம் எங்கணும் கமழ்ந்த இப்புராதன புண்ணிய பூமியாகிய பரத கண்டத்தில், புறச்சமயக்களை செழித்தோங்கிய அவ்வாபத்தான சமயத்தில், சர்வேசுவரனின் அவதாரமாகத் தோன்றியருளினுர் ஸ்ரீஆதிசங்கரபகவத் பாதர்கள்.

**"பரித்ராணுய ஸாதூநாம் விஞசாய ச துஷ்க்ருதாம்.**
**தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே"**

என்று ஸ்ரீ பகவான் கீதையில் மொழிந்தருளினுரன்ருே? எப்பொழுதெல்லாம் அதர்மம் ஓங்கித் தர்மம் நலிகின்றதோ, நன்மக்கள் தீயோர்களால் துன்புறுத் தப்படுகின்ருர்களோ, அப்பொழுதெல்லாம் ஈச்வர அவதாரம் நிகழ்ந்தே தீரும். இத்தகைய அவதாரங்கள் தோன்றுவது புண்ணிய பூமியாகிய இந்த நாவலந் தீவில்தான் என்பது சரித்திரம் கூறும் உண்மை. செந் தாமரை தண்ணீரிலன்றிப் பிறவிடங்களில் தோன்று வதுமுண்டோ? தாமியற்றிய செயற்கருஞ் செயல் களால் சங்கரர், ஸம்பந்தர், மணிவாசகர், வள்ளலார், இராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர் போன்ற அவதார புருஷர்கள் ஹிந்து ஸமயத்தை நன்கு வேரூன்ற வைத்து அதன் ஜீவன் எக்காலத்திலும் எவ்விதத் தீங்காலும் ஊறுபடாமலிருக்குமாறு செய் தருளினர். முப்பத்திரண்டே ஆண்டுகள் உயிர் தரித் திருந்த ஸ்ரீ ஆதிசங்கரர் பரதகண்டத்தின் நாலுதிக்கு களிலும் சிங்கமெனப் பவனிவந்து, மெய்நெறியாகிய வைதிக ஸமயத்தை என்றென்றும் நிலைத்திருக்கும்படி

செய்த மாபெரும் உதவிக்குச் சான்றோருலகம் பிரபஞ்சம் உள்ளளவும் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறது. அமுதமயமாம் அற்புத கிரந்தங்கள் பற்பலவற்றைப் பெருமழை பொழிவதேபோல் குவித்துத் தள்ளினாரே, அது மனித ஸாத்தியமான செயலாமோ? திருக்கோவில்களில் பூசனைகளும், திருவிழாக்களும், வேத பாராயணங்களும், வேள்விகளும் இன்றும் நடைபெறுகின்றனவென்றால், அதற்குக் காரணம் ஸ்ரீசங்கரர் ஒருவரே தான் என்பது மறுக்க இயலாத உண்மையாகும்.

கடந்த பல ஆண்டுகளாக பாரதநாட்டு மக்களிடையில் அறவுணர்ச்சி மழுங்கி, உலோகாயத ஆர்வம் பெருகி வருவதின் விளைவாகத்தான் நாட்டில் பஞ்சம், மழையின்மை, பண்புக்குறைவு முதலிய இடர்கள் மலிந்திருக்கின்றன. தர்மத்தை நிலை நிறுத்தவேண்டி அதோ, அவதார புருஷனின் ஒளி காஞ்சியிலிருந்து கண்ணுக்கெட்டும்வரை இத்தேசத்தின் எட்டுத் திக்கிலும் பரவுகின்றதைப் பாருங்கள்! உபவாஸங்களால் மெலிந்த அந்தப் பொன்னான திருமேனியின் புனித தாமரைப் பாதங்கள் பட்டுப் பவித்திரமடையும் ஊர்கள் பெறும் பாக்கியம்தான் என்னே! ஒளிவீசும் அத்தெய்வத் திருவுருவத்தையும், அருள் பொழியும் திருநயனங்களையும், மின்னலெனப் புன்னகை தவழும் திருவதநத்தையும் காணக் கொடுத்து வைத்துள்ளவர்கள் என்ன தவம் செய்தனரோ! உலகத்துக்கு வழி காட்டுவதற்காக, குருநாதர் நாள்தோறும் இயற்றும் பூசனையைக் கண்டு களிப்பவர்களின் பேறுதான் என்னே! அந்தத் திவ்விய கண்டத்தினின்றும் வெளி

வரும் அரிய, அமுத மொழிகளைக் கேட்டுய்யும் மக்கள் செய்த நோன்புதான் என்னே! அந்தப் பொற் கரங்களால் வார்க்கப்படும் புனித தீர்த்தத்தை உட்கொள்வதால் ஜன்ம ஸாபல்ய மெய்துமவர்கள், அம்மம்ம, எத்தனை புண்ணியம் செய்தனரோ! தருமமும், பக்தியும், சன்மார்க்கமும் செழித்து வளரவேண்டி எம் ஐயன் அல்லும்பகலும் அறுபதாண்டுகளாக ஆற்றி வரும் பல்வேறு மாபெரும் சாதனைகளைப்பற்றி எடுத்துரைக்க எளியவனுக்கு ஆற்றலும் சொற்றிறனும் ஏது? இயம்புவதென்றால் ஏட்டில்தான் அடங்குமோ? இங்ஙனம் நம்மிடைத் திகழும் அவதார புருஷராகிய ஸ்ரீஆசார்யஸ்வாமிகளின் திருவுளப்பாங்கின்படி, ''ஸரளத்திலும் ஸரளமாயும், மதுரத்திலும் மதுரமாயும்'' விளங்கும், ஸ்ரீபகவத்பாதர்கள் அருளிய, ஸ்ரீபஜகோவிந்த ஸ்தோத்திரமானது ''குழந்தைகள் பாமரர் உள்பட உலகம் அந்தக்கரண சுத்தியை அடைவதற்காகவும், பகவத் பக்திக்கு பரவசப்பட்டதாக ஆகவேண்டியும்,'' ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தால், சில ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிடப்பட்டது. ஈச்வரபக்தி ஒன்றினால்தான் மக்கள் திருந்தி மேம்பாடடையவும், நாடு ஸகல இன்னல்களும் நீங்கி சுபிக்ஷம் எய்தவும் இயலும். ஆகவே பக்திப் பிரசாரத்துக்கு இன்று மிகவும் அவசரமும் அவசியமும் ஏற்பட்டிருக்கின்றன.

ஒரே முறை ஸ்ரீபஜகோவிந்த ஸ்தோத்திரத்தை ஏகாக்ர சித்தத்துடன் பயில்பவர்கள் உலக வாழ்க்கை, குடும்பம், செல்வம், ஸுகம் போன்றவை அனைத்தும் நீர்மேற் குமிழி போன்று நிலையாத தன்மை வாய்ந்தன

வென்றும், ஸர்வேச்வரனின் திருநாமத்தை ஓதும் ஒரு எளிய காரியத்தைச் செய்தாலே அழிவற்ற இன்பத்தை எய்தலாம் என்றும் உணர்வர். இததகைய மகிமை வாய்ந்த இந்த ஒப்புவமை அற்ற ஸ்தோத்திரத்தின் சொற்பொருள் நயங்கள், கம்பீர நடை, ஓசை இன்பம் இவைகளைக் கற்போரின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத்தக்க வண்ணம் அமைத்தார் வித்தகராகிய ஸ்ரீபகவத்பாதர்கள். வடமொழி அறிந்தோர் மட்டுமே இதன் செஞ்சொற் கவி இன்பத்தையும் ஏனைய நன்மைகளையும் துய்க்க இயலும். இதனை யாராவது சுவையுற மூலத்தின் இனிய சந்தம் அமைந்த பாடல்களில் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடமாட்டார்களா என்று மிகவும் ஆசையுற்றேன். இவ்வாசை காரணமாக "குருநாதரின் பாதத் தாமரைகளை உருகிப் பரவினேன்." இதன் விளைவாகத் தான் திருவருள் இம்மொழிபெயர்ப்பை எளியேனைக் கொண்டு செய்வித்திருக்கிறது. தமிழில் யான் பெருங் கவிஞனல்ல. வடமொழியும் அறிந்தவனல்ல. இருப்பினும் "மூலத்தின் கருத்துகளைச் சுவை குன்றாமல் விளக்குகிறது" "சிலாக்கியமாயிருக்கிறது" என்று ஸ்ரீகுருநாதரே பாராட்டும் வண்ணம் இம்மொழி பெயர்ப்பு அமைந்தது விந்தையேயன்றோ? குருநாதரின் திருவருள், அதாவது தெய்வசக்தியின் உறுதுணை கிட்டினபிறகு விந்தைகள் நிகழ்வதில் விந்தையும் உண்டோ? தோன்றாத்துணையாக நின்று இங்ஙனம் செய்வித்த பின்னர், கருணைக் கடலாகிய ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள் குழவியின் மொழி கேட்டுக் குழைந்திரங்கும் அன்னையையொப்ப மனமுவந்து திவ்ய

ஸ்ரீமுகமும் வழங்கி யருளினார்கள். இதற்கெல்லாம் கைம்மாருக, ''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்'' அவர் தம் பொற்பதம் சிரத்திற் பூண்டுகொள்வேன் என்று செப்புவதன்றி மற்றென்செயமாட்டுவேன்.

எளியவனுடைய சிற்றறிவுக் கெட்டியவரை பாடல்களுக்கு மூலத்தை ஒட்டிப் பொழிப்புரை மொழிந்துளேன். நினைவுக்குவந்த சிற்சில தமிழ்ப் பாடல்களை ஆங்காங்கு மேற்கோள்களாகக் காட்டி யுள்ளேன். எந்த மொழிபெயர்ப்புமே மூலத்துக்கு ஒருபோதும் ஈடாகமாட்டா. ஸர்வேச்வரனின் அவ தாரமான ஸ்ரீசங்கரரின் மஹோன்னதமான திவ்ய வாக்கு எங்கே! புல்லறிவினனுகிய எனது புன்மொழி எங்கே! சிந்தித்துப் பார்க்கக்கூடக் கிஞ்சித்தும் இட மில்லை. அங்ஙனமிருப்ப இம்முயற்சியில் யான் துணிந் திறங்கியது எற்றுக்கு என்ருல், மலரவள் உறையும் மார்பினன், உலகம் புரக்கும் உத்தமன் ஸ்ரீ பகவானை ஏதோ சற்றுத் துதித்து அன்னவனுடைய கிருபா கடாக்ஷம் பெறலாமோ என்ற ஆசையால் என்க. இது மட்டுமல்லாது, இதனைக் கண்ணுறும் ஒரு சிலர் மூல ஸ்தோத்திரத்தைப் பயிலத் தூண்டப்படுவார்கள் என்று நம்புகிறேன். (ஆகவேதான் மூல ச்லோகங் கள் நாகரியிலும், தமிழிலும் அனுபந்தமாக இதில் சேர்க்கப்பட்டுள்ளன.) என்னுடைய இந்த ஒரு நோக்கத்தைக் கருதி, மேன் மக்கள் இந்நாலிலுள்ள எனது குற்றங்குறைகளைப் பொறுத்தருளுமாறு இறைஞ்சுகின்றேன்.

**ஆக்கியோன்**

ஸ்ரீ:

# ஸ்ரீ பஜகோவிந்தம்

(1)

**கோவிந்தன்துதி கோவிந்தன்துதி**
**கோவிந்தன்துதி மதிமூடா!**
**சாவின் தன்கதி மேவும் அந்தியுன்**
**பாடந்தந்திர மேதுங்காவா.**

**பொழிப்புரை :**

ஏ மதிமயங்கிய மூடனே! பகவான் ஸ்ரீகோவிந்தனை நீ ஸதாகாலமும் துதித்துக்கொண்டிரு. உன் ஆயுள் முடிந்து சாவு உன்னை அணுகும் தருணத்தில், நீ கற்ற பாடம், வித்தை, எதுவும் உன்னைக் காப்பாற்ற மாட்டா, காப்பாற்றமாட்டா.

**விசேஷ உரை :**

ஸ்ரீ கோவிந்தனைத் துதி என்று மும்முறை மொழிந்திருப்பது ஸதாகாலமும் ஓய்வின்றி வழிபடவேண்டும் என்பதை வலியுறுத்துவதன் பொருட்டாகும். மரணம் எப்போது வரும் என்பதை எந்த மனிதனும் அறியமாட்டான். ஆகவே வாழும் நாட்கள் முழுவதுமே ஒருவன் இறைவன் நாமத்தைச் சதா சொல்லி, நாவை ஸ்வேச்சையாகவே துதியில் ஈடுபடச் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் திடீரென்று மரணம் ஸம்பவித்தாலும் நாவானது தானாகவே பகவானின்

திருநாமத்தை உச்சரிக்கும். மரணத்தின் தருவாயில் அங்ஙனம் ஈசனின் நாமம் மொழியப்படுமாயின், அது ஒன்றே முக்தியை அளிக்க வல்லதாகும். "டுக்ருஞ் கரணே" என்ற மூலபாடம் வியாகரண சாஸ்திரப் பயிற்சியைக் குறிப்பிடுவதாகும். உள்ளக்கிளர்ச்சி இல்லாமல், சிறுவர்கள் கணித வாய்ப்பாடு மனனம் செய்வதைப்போல் வியாகரணம் முதலியவைகளை அத்தியயனம் செய்வதைவிட, உள்ளம் உருகிப் பகவானின் திருநாமத்தைச் சொல்வது நல்ல பலனளிக்கத்தக்கது, என்று ஸ்ரீபகவத்பாதர்கள் குறிப்பால் எடுத்துணர்த்துகின்றார்.

**" அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேபரம் |**
**யஃ ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சயஃ ||**

என்ற கீதா வாக்கியம் (8—5) காண்க. "மரண காலத்திலும் என்னையே நினைந்து எவன் உடலைத் துறக்கிறானோ, அவன் என் ஸ்வரூபத்தை அடைகிறான். இதில் ஸந்தேகமில்லை" என்றார் பகவான்.

**அரும்பதவுரை :**

கோவிந்தன்துதி - கோவிந்தனைத் துதி. (புத்தகம் படி, பால் குடி என்பவைபோல, இரண்டாம் வேற்றுமைத் தொகை.) கதி – வரம்பு. அந்தி - இவ்விடத்தில் தருணம் என்று பொருள் தரும். வாழ்க்கையின் கடைசி தினம் எனவும் கொள்ளலாம். தந்திரம் - வித்தை. பாடம் - படிப்பு. காவா - காப்பாற்றமாட்டா.

**" காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே**
**பாலுண் கடைவாய்ப் படுமுன்னே—மேல்விழுந்தே**

**உற்ருர் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே**
**குற்ருலத் தானையே கூறு.''**

என்ற ஸ்ரீ பட்டினத்தடிகளார் திருப்பாடல் காண்க.

(2)

**காசுபணத்தைத் தேடுவதிற்பே -**
**ராசையை விட்டுத ருய் நீ மூடா !**
**மாசறுநெறிசார் மேனுள் வினையா**
**லேசேர் பொருளா லேமகிழ்வுறுவாய். (கோவிந்)**

**பொழிப்புரை :**

மூடனே! பொருள் ஸம்பாதிப்பதில் பேராசை யைக் கொள்ளாதே. அவ்வித ஆசையை உதறித் தள்ளிவிடு. குற்றமில்லாத வழிகளில் புத்தியைச் செலுத்து. (குற்றமின்றி வாழ்க்கை நடத்துபவன் பெரும் அறம் செய்தவனுவான். அது ஒன்றே ஈசனை அடையும் நெறியை அவனுக்கு உணர்த்தும்.) அப் படிக் குற்றமில்லா வழிகளில் வரும் பொருளைக் கொண்டும், உன் பூர்வ ஜன்மங்களின் பாவபுண்ணியங் களுக் கேற்றவாறு இப்பிறவியில் உனக்கு வரும் பொருளைக் கொண்டும், நீ திருப்தியுற்று உன் மனதை மகிழ்வுறுத்துவாயாக.

**''மனத்துக்கண் மாசில னுதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற.''**

என்ற திருவள்ளுவரின் பொய்யாமொழியை இது நினைவுறுத்துகின்றது.

**'' கோவிந்தன்துதி கோவிந்தன்துதி**
**கோவிந்தன்துதி மதிமூடா ''**

என்பதைப் பல்லவியாக இந்தக் கவிக்கும் மற்றும் பின்வரும் எல்லாக் கவிகளுக்கும் வைத்துக்கொள்ள வேண்டும்.

**அரும்பதவுரை :**

மாசறுநெறி - குற்றமற்ற வழி. மேனுள்வினை - பூர்வத்தில் செய்த புண்ணிய பாவங்கள். பொருள் - செல்வம். 'மாசறுநெறிசார்' என்பது குற்றமற்ற வழியைக் கொள் என்றும், '' பொருளாலே மகிழ்வுறுவாய் '' என்ற சொற்றொடருடன் இணைந்து குற்றமிலா வழிகளில் ஈட்டப்படும் தனத்தைக் கொண்டு மகிழ்வடைவாய், என்றும் பொருள் தரும்.

(3)

**நாரியர்கொங்கை நாபிகள் கண்டே**
**மீறிய மோகம் கொண்டு கலங்கேல்**
**கூரியசிந்தையி லுலறியங்கவை**
**கொழுவின் தசையின் கூறுகளென்றே. (கோவிந்)**

**பொழிப்புரை :**

பெண்ணின் நகில்கள், நாபி ஆகிய உடலுறுப்புக்களைக் கண்டு மோக வெறியை அடையாதே. மாமிசம், கொழுப்பு இவைகளின் அம்சம்தான் இவை என்பதை மனதில் அடிக்கடி நன்கு யோசித்துப்பார்.

காமம் பரநெறிக்கு அதிக இடைஞ்சல் விளைவிக்கும் என்னும் கருத்து இவ்வாறு அழகுற எடுத்துரைக்

கப்படுகிறது. வெறும் அங்கலாவண்யத்தால் அறிவை இழந்துவிடாதே என்னும் பொருளும் தொனிக்கிறது. எந்தவிதமான எழில் வாய்ந்த உருவமும் உறுப்புக் களும் தசை, கொழுப்பு முதலிய அருவருக்கத்தக்கதும் விரைவில் அழியக்கூடியதுமான பொருள்களின் பரிணமம் என்கிறார். வெறும் காட்சியளவில் கூட வெறியை ஊட்டும் திறன் காமத்துக்குத்தான் உண்டு. கள்ளினும் காமம் வலியது என்பதைத் திருவள்ளுவர் :

**'' உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்தல் இன்று.''**

என்று மொழிந்துள்ளார்.

**அரும்பதவுரை :**

நாரியர் - பெண்கள். கொங்கை - ஸ்தனம். நாபி - கொப்பூழ். கொழுவின் - கொழுப்பின். தசையின் - மாமிசத்தின். கூறுகள் - அம்சங்கள்.

**'' குடரும் கொழுவும் குருதியும் என்பும்**
**தொடரும் நரம்பொடு தோலும்—இடையிடையே**
**வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்**
**எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்.''**

என்ற நாலடியார்ப் பாடல் காண்க,

**'' நாறுங் குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுருஞ்சீ**
**ஊறு மலக்குழி காமத்து வார மொளித்திடும் புண்**
**தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பய்விட்**
**டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீச்சுரனே.''**

'' பெண்ணுகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப்பொருள்பறிக்க
எண்ணு துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே.

'' சீறும் வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு
கூறு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினுல்
பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண்டி லேனிறை வாகச்சி யேகம்பனே.''

என்ற ஸ்ரீ பட்டினத்தடிகளின் பாடல்கள் காண்க.

(4)

**தாமரையிலையுறு தண்ணீர்தகுமே**
**சஞ்சலமுறுவது வாழ்விதுவாமே**
**ஆமிது உலகம் நோயபிமானம்**
**சோகமிகுவது நீயிதை யறிதி. (கோவிந்)**

பொழிப்புரை :

*தாமரையிலையில் தங்கியிருக்கும் நீர்த்துளி எவ்வாறு சஞ்சலமுடையதாக உளதோ, அதுபோலவே வாழ்வும் நிலையற்றதாகும். நோய், அஹங்காரம் இவைகளால் பிணிப்புடையதும், துயரம், துன்பங்களால் பீடிக்கப்பட்டதுமாகும் இவ்வுலக வாழ்வு என்பதை நீ அறிந்துகொள்வாயாக.*

'' நீரிற்குமிழி இளமை நெடுஞ் செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்

**எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே**
**வழுத்தாத தெம்பிரான் மன்று.''**

என்ற ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கு ஈண்டு நினைவு கூறற் பாற்று.

**அரும்பதவுரை :**

தகுமே - போன்றதாகும். சஞ்சலம் - நிலையற்ற தன்மை. இது உலகம் - இவ்வுலக வாழ்வு. அபிமானம் - அஹங்காரம். சோகம் - துயரம். அறிதி - அறிந்து கொள்வாய். ஆம் என்பதை மிகுவது என்ற சொல் லுடன் கூட்டி மிகுவதாகும் என்று பொருள் கொள்க.

(5)

**உண்டாம்பொழுதுன் உறவினர் சூழ்வர்**
**கொண்டாடுவர் நீ தளர்வுறு தருணம்**
**கண்டாலெவரும் வாரார்மதியார்**
**அந்தோ உரைதான் புரியவு முனையார். (கோவிந்)**

**பொழிப்புரை :**

எவ்வளவு காலம் ஒருவன் தனம் சம்பாதிக்கும் சக்திவாய்ந்தவனாக இருக்கிறானோ, அதுவரை அவ னுடைய உற்றார் உறவினர் அவனைச் சூழ்ந்து பிரியம் காட்டுவார்கள், ஆனால் அவன் தளர்வுற்று நொந்து வாழும் தருணத்தில் ஒருவரும் அவன் வீட்டிற்கு வந்து உரையாடவும் மாட்டார்கள்.

அரும்பதவுரை :

உண்டாம்பொழுது - கையில் தனம் உள்ள சமயத்தில். வாரார் - வரமாட்டார்கள். மதியார் - மதிக்கமாட்டார்கள். முனையார் - முற்படமாட்டார்கள்.

**'' ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற**
**பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ்**
**சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே**
**யாருஞ் சதமல்ல நின்தாள் சதங்கச்சி யேகம்பனே ''**

என்ற ஸ்ரீபட்டினத்தடிகளார் பாடல் காண்க.

(6)

**எதுவரை மூச்சுன துடலில் உளதோ**
**அதுவரை நலனள வளவிடுவாரே**
**வதுவைசெய்பாரியும் வெருவுறும்ஆவி**
**மாய்வுறு பினருன் பிணமது கணுறின். *(கோவிந்)***

பொழிப்புரை :

எதுவரையில் உன் உடலில் ஜீவன் இருக்கிறதோ அதுவரைதான் உன்னுடன் க்ஷேமஸமாசாரங்களைப் பற்றி (உலக மக்கள்) அளவளாவுவார்கள். ஆனால் தேகம் அபாயம் அடைந்து மூச்சு அடங்கிவிட்டால் அந்த உயிரில்லாத சடலத்தைக் கண்ணுறும் மனைவியும் கூட பயப்படுவாள்.

**அரும்பதவுரை :**

அளவளவிடுவார் - ஸம்பாஷிப்பார். வதுவை - மணம். பாரி - மனைவி. வெருவுறும் - பயப்படுவாள். ஆவி - ஜீவன். மாய்வுறுபினர் - மரணமடைந்த பின்னர். கணுறின் - கண்ணுற்று, பார்த்து.

**'' கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்**
**வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்**
**கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்**
**எட்டி யடிவைப்ப ரோவிறை வாகச்சி யேகம்பனே.''**

என்ற ஸ்ரீ பட்டினத்தடிகளார் பாடல் காண்க.

**'' கணம்கொண்டு சுற்றத்தார் கல்என்று அலறப்**
**பிணம்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும்—மணம்**
**கொண்டீண்டு**
**உண்டுண்டுண் டென்னும் உணர்விலன் சாற்றுமே**
**டொண்டொண்டொ டென்னும் பறை.''**

என்ற நாலடியார்ப் பாடல் காண்க.

(7)

**குழவியில்விளையாட் டார்வம்காளை**
**குமரியிலார்வம் கொள்ளும்வேளை**
**கிழவன் சிந்தையில் விழுவன் எனினே**
**பரமனிலார்வம் எவனும்இலனே. (கோவிந்)**

**பொழிப்புரை :**

பாலனாக இருக்கும்பொழுது விளையாட்டில் ஆர்வம் கொண்டுள்ளான். வாலிபப் பருவத்தில் பெண்

களில் ஈடுபடுகிறான். கிழவனாயின் கவலையில் ஆழ்ந்து விடுகிறான். ஆனால், பரம்பொருளினிடத்தில் எவனும் ஈடுபடுவதில்லையே.

பருவத்துக்குத் தக்கவாறு விண்விளையாட்டு, பெண், கவலை முதலான பயனற்ற விஷயங்களில் ஈடு பட்டு வாழ்நாளை விணாக்கும் எவனும் மோக்ஷ மென்னும் நிகரற்ற இன்பத்தைத் தரவல்ல பரம் பொருளின் மாட்டு ஈடுபடுகிறானில்லையே என்று அங்கலாய்த்துக் கொள்ளுகிறார்.

**அரும்பதவுரை :**

குழவியில் - குழந்தைப் பருவத்தில். காளை - வாலி பன். குமரி - பருவப் பெண். சிந்தை - கவலை.

(8)

**யாருன்மனைவி யாருன்மைந்தன்**
**பேரதிசயமிது ஸம்சாரந்தான்**
**யார் நீ எங்குற் றனைமெய்ப்பொருணீ**
**யானாய் தத்வம் சிந்தனைபுரி நீ (கோவிந்)**

**பொழிப்புரை :**

உன்னுடைய மனைவி யார்? உன் மகன் என்பவன் யார்? இந்த ஸம்ஸாரமானது பெரிய அதிசயமாக இருக்கிறது. நீ யார்? இங்கு வந்தது எப்படி? ஏ பித்தனே! மெய்ப்பொருளான அந்த பரப்ரஹ்மமே நீயாக இருக்கிறாய் என்ற உண்மையை நீ நன்றாகப் புரிந்து கொள்வாயாக.

அத்வைத்தின் மதத்தின் ஸாரமாகிய "தத்வமஸி" என்ற வேதாந்த மஹாவாக்கியமானது இப்பாடலில் தொனி மாத்திரத்தில் அமைந்துள்ளது. மூல ச்லோகத்திலும் இங்ஙனமே அமைந்திருப்பது காண்க. "தத்வம் சிந்தனைபுரி நீ" என்ற தொடருக்கு தத்துவத்தைச் சிந்தித்துப்பார் என்பது பொருள்.

**அரும்பதவுரை :**

மெய்ப்பொருணீ - மெய்ப் பொருள் நீ, சந்தி விதியின் படி பொருணீ என வந்தது. மெய்ப் பொருளாவது பரம் பொருள்.

*(9)*

**சற்சங்கத்திற் சேர்பற்றகலும்**
**பற்றதுவிலக இற்றதுமோகம்**
**உற்றிடுமத்தரு ணத்திற்சலனம்**
**அற்றிடுநிலைபின் முக்தச் சீவன். (கோவிந்)**

**பொழிப்புரை :**

நல்லவர்களுடைய கூட்டுறவு ஏற்படும்பொழுது பற்றில்லாமை ஏற்படுகிறது. பற்றின்மை உண்டானால் மோஹம் இல்லாத நிலை உண்டாகிறது. மோஹமில்லாத நிலை எய்தினால் சலநம் இல்லாத ஞாநநிலைமை எய்தலாம். சலநம் அற்ற ஞான நிலையில் உயிருடன் முக்தி என்ற "ஜீவன்முக்தி" நிலை ஏற்படும்.

ஜீவன்முக்தி என்பதை "மரணமிலாப் பெரு வாழ்வு" என்று ஸ்ரீ இராமலிங்க வள்ளலார் உரைப் பார். வள்ளலாரின் அருட்கவி வருமாறு.

நினைந்து நினைந் துணர்ந்து ணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந் தன்பே
நிறைந்து நிறைந் தூற்றெ ழுங்கண்
ணீரதனலுடம்பு
நனைந்து நனைந் தருளமுதே
நன்னி தியே ஞான
நடத்தரசே யென்னுரிமை
நாயகனே என்று
வனைந்து வனைந் தேத்துதும் யாம்
வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன்
சத்தியம் சொல்கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற்
புகுந்தருண மிதுவே.

அரும்பதவுரை :

சற்சங்கம் - நல்லோர் உறவு. பற்று - பொருள் களிடத்துண்டாகும் ஆசை. இற்றது மோஹம் - மோஹம் அகன்றது. மோஹமிற்ற தருணத்தில், சலகம்

அற்றிடும் நிலையும், அதன்பின் (அதாவது சலனம் அற்ற நிலையில்) ஜீவன் முக்தி நிலையும் உறும் என்று பொருள் கொள்க. முக்தச்சிவன் - ஜீவன் முக்தன். அதாவது உயிருடன் முக்தி எய்தும் நிலை.

(10)

**வயதுமுதிர்ப்பிற் காமமும் ஏது**
**நீரதுவற்றின் ஏரியுமேது**
**பொருளது குறையின் உறவெது ஞானம்**
**தெரிவதனப்புறம் எது சம்சாரம். (கோவிந்)**

**பொழிப்புரை :**

வயதுசென்று மூப்படைந்தபிறகு காம விகாரம் எங்கிருக்கும்? தண்ணீர் வற்றி விட்டால் ஏரி எங்கிருந்து இருக்கும்? கையிலுள்ள தனம் குறைந்து விட்டால் பரிவாரங்கள், உறவினர் ஏது? மெய்ஞ் ஞானம் வந்த பிறகு ஸம்ஸாரம் ஏது?

அதாவது மனிதன் மூப்பெய்தினுல் காம விகாரம் அற்றுப்போய்விடும். தண்ணீர் வற்றிவிட்டால் ஏரி என்பதிருக்காது. ஒருவனுடைய தனம் குறைந்து விட்டால், (மேலே ஐந்தாம் கவியில் உரைத்தது போல்,) உறவினர் முதலியவர்கள் அகன்றுவிடுவார் கள். மெய்ஞ்ஞானம் அடைந்துவிட்டால், ஸம்ஸார பந்தம் நீங்கிவிடும் என்றவாறு. மெய்ஞ்ஞானம் நீயே மெய்ப் பொருளாவாய், "தத்துவமஸி" என்ற தத்துவமாகும்.

(11)

தனத்தில் இளமை இனத்தில் இவையில்
செருக்கேல்காலம் அழிக்கும் இமையில்
சகமிதுமாயா காரியமறிவாய்
சகலம்விடுவாய் பரநெறியடைவாய். (கோவிந்)

**பொழிப்புரை :**

தனம், யௌவநம், சுற்றத்தார் இவைகளால் சற்றும் கர்வம் அடையாதே. காலமானது எல்லா வற்றையும் கண்ணிமைப்பொழுதில் அழித்துவிடக் கூடியது. இந்த உலகமானது மாயையின் காரியம் என்ற உண்மையை அறிந்துகொள். ஸகலமான பொருள்களையும் துறந்து நீ பரப்ரஹ்ம நிலையை அடைவாய்.

**அரும்பதவுரை :**

தனம் - செல்வம். இனம் - சுற்றத்தார். செருக்கேல் - கர்வம் கொள்ளாதே. இமையில் - கண்ணிமைக்கும் நேரத்தில். சகம் - உலகம். [ஜகம் என்றதன் தற்சமம்] மாயாகாரியம் - உலகம் மித்யை என்ற அத்வைத உண்மை. [விரிக்கிற் பெருகும்].

(12)

பகலே இரவே மாலைகாலை
பனிஇள வேனில் எனவே காலம்
கொளும் விளையாட்டில் குறையுமுளுயுள்
புயல்நிகராசை அயர்வதுமேயில். (கோவிந்)

**பொழிப்புரை :**

பகல், இரவு ; மாலை, காலை ; பனிக் காலம், இள வேனிற் 'காலம் ; இவை (சகடம்போல்) மீண்டும் மீண்டும் வருகின்றன. காலமானது இப்படி விளையாடிக்கொண்டிருக்கும்போது, உன் ஆயுள் (நீயும் உணராமல்) கழிந்துகொண்டே வருகிறது. இப்படி இருப்பினும் ஆசை என்கிற புயல்காற்றானது உன்னை விடுவதில்லை.

**அரும்பதவுரை :**

புயல்நிகர் - புயல் காற்றைப் போன்ற. அயர்வது மேயில் - ஓய்வதில்லை.

**"நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும்**
**வாள் அது உணர்வார்ப் பெறின்."**

என்ற திருக்குறட்பாக் காண்க.

(13)

**மனைவிதனமிவை தனிலுறுகவலை**
**புயலென் அலைவாய் புகல்வேறிலையோ**
**சகமூன்றிலுமே சற்ஜனர்நேயம்**
**சம்சாரக்கடல் தாண்டு முபாயம். (கோவிந்)**

**பொழிப்புரை :**

மனைவி, செல்வம் இவைகளைப் பற்றிக்கொண்ட கவலையால் புயல்காற்றைப்போல் அலைபவனே ! உனக்குப் புகல் இல்லையா ? இந்த மூன்று லோகங்களிலும்,

நன்மக்களின் கூட்டுறவு ஒன்றுதான் சம்ஸாரமாகிய ஸாகரத்தைக் கடக்க உனக்குப் படகாக உதவும்.

**அரும்பதவுரை :**

புயலென் - புயல் காற்றைப்போல. சற்ஜனர் - நன்மக்கள். நேயம் - நட்பு, கூட்டுறவு. உபாயம் - இங்கு படகு. ['' காந்தா அதர '' அதாவது மனைவியின் உதடு என்ற பாடபேதம் மூலத்தில் உண்டு. மொழிபெயர்ப்பில் மனைவியின் ஸ்தனம் என்ற தொனிப் பொருள் உள்ளமை காண்க].

(14)

**சடையே மழித்த பறித்த கேசம்**
**உடைகாவிக்கலை பற்பலவேஷம்**
**நடைபயிலாத்தத் துவமறிமூடன்**
**வேடம்பலகுறி தான்வயிறுமென். (கோவிந்)**

**பொழிப்புரை :**

சிரத்தில் ஜடை பூண்டவனாகவும், மொட்டையடித்த தலையுள்ளவனாகவும், ஒவ்வொன்றாகப் பறித்துக் களைந்து கேசம் நீக்கிய தலையுள்ளவனாகவும், காஷாய ஆடை தரித்தும் இதுபோன்ற பற்பல வேஷங்களைக் கொண்டிருந்தாலும்கூட, தத்துவங்களை (அறிந்திருந்தும்) அநுபவத்துக்குக் கொண்டு வராதவன் மூடனேயாவான். அவன் பூண்டிருக்கும் வேஷங்கள் யாவும் வயிற்றின் பொருட்டே என்று விளங்கும்.

,, வான்உயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப்படின்.''

'' மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்ததொழித்து விடின்.''

*என்ற திருக்குறட்பாக்கள் ஈண்டு நினைவுறற்பாற்று.*

**அரும்பதவுரை :**

*மழித்த - மொட்டையடிக்கப்பட்ட. பறித்தகேசம் - [சமணர்கள் போல்] ஒவ்வொன்றாகக் கையால் பிடுங்கி எறியப்பட்ட கேசம். கேசம் - உரோமம். காவிக்கலை - காவியாடை. வயிறுமென் - வயிறு என்க.*

'' காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன உள்ளன்பி லாதவர் ஓங்குவிண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடேயிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.''

*என்ற ஸ்ரீ பட்டினத்தடிகளார் பாடல் காண்க.*

*(15)*

தளர்வுறு முடலன் தலைநரை உடையன்
தந்தமிலாவா யுங்கொளுமுதியன்
கரமுறு தடிதுணை யாகநடப்பான்
கழிபெருமாசை களைவிடமாட்டான். (கோவிந்)

பொழிப்புரை :

உடல் தளர்வடைந்துவிட்டது. தலையானது நரைத்துவிட்டது. வாய்பற்களை இழந்துவிட்டது. இப்படியிருக்கும் கிழவன் கையில் தடியைப் பிடித்துக் கொண்டு அதன் துணையால் தள்ளாடி நடக்கிறான். சாவு இன்றோ நாளையோ என்னும் ஒரு நிலைமை. இந்த நிலைமையிலும்கூட ஆசை அவனை விடுவதில்லை.

அரும்பதவுரை :

உடலன் - உடலைக் கொண்டவன். தந்தம் - பல். முதியன் - கிழவன். கரம் - கை. கழிபெருமாசை - அதிகமான ஆசை.

"சொல்தளர்ந்து கோல் ஊன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பல்கழன்று பண்டம் பழிகாறும் — இல்செறிந்து
காமநெறிபடரும் கண்ணினார்க் கில்லையே
ஏம நெறிபடரு மாறு."

என்ற நாலடியார்ப் பாடல் காண்க.

" புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு."

என்ற நீதிநெறி விளக்கச் செய்யுள் காண்க.

(16)

முன்பின் தீவெயி லிற்குளிர் காய்ந்தும்

மோவாய் முழங்கால் மேவத் துயின்றும்

தன்கைப் பிச்சை தின்றுந் தருநிழல்

வாசம் செயினும் ஆசை களைவதில். (கோவிந்)

**பொழிப்புரை:**

*(குளிர் தாங்க இயலாமல்) தன் முன்புறத்தில் வளர்த்தப்பட்ட தீயிலும், பின்புறத்தில் சூரியனின் வெயிற் சூட்டிலும் குளிர்காய்கிறான். இரவில் தன் மோவாயானது முழங்கால்களில் தாழ்ந்துற வளைந்து படுத்து உறங்குகிறான். கையில் பிச்சை ஏற்று உண்கின்றான். மரத்தின் அடியிலேயே குடியிருந்து வாழ்கின்றான். இங்ஙனமிருப்பினும் ஆசை என்னும் தளை நீங்கினபாடில்லை.*

**அரும்பதவுரை:**

*மேவ - உறும்படி. துயின்றும் - உறங்கியும். தரு - மரம். ஆசைகளைவதில் - ஆசையை அகற்றுவதில்லை.*

(17)

சாகரம் கங்கை ஏகுவன் கோன்பு

தகவுற நோற்பன் தானம்தருவன்

ஞானமிலாதவன் நூறுபிறவியில்

வீடடையானிது நாடறியுண்மை. (கோவிந்)

**பொழிப்புரை :**

ஸமுத்திரம், கங்கை இவைகளில் நீராட வேண்டித் தீர்த்தயாத்திரை செல்கிறான். சிறந்த முறையில் நோன்பு நோற்கிறான் : தானங்களை வழங்குகிறான் : (இவைகளினால் உண்மையில் என்னபலன்?) ஞானமில்லாதவன் நூறு பிறவிகள் எடுத்தாலும் அவன் முக்தியை அடையப்போவதில்லை என்பது ஸர்வமத உண்மை.

**அரும்பதவுரை :**

ஸாகரம் - கடல். ஏகுவன் - (யாத்திரை) செல்வான். நோன்பு - விரதம். தகவுற - சிறப்பாக. நோற்பன் - அனுஷ்டிப்பான். வீடு - முக்தி.

(18)

**ஆலயம் மரநிழல் வீடமளிதரை**
**ஆடைகளணிவது மானுரிதனரை**
**ஆசைகள் போகம் தியாகம் புரியும்**
**அவர்நிகரும் சுகம் அடைவதில் எவரும். (கோவிந்)**

**பொழிப்புரை :**

கோவில்களையும், மர நிழலையுமே வீடாகக் கொண்டும், மண் தரையையே படுக்கையாகக் கொண்டும், மானின் தோலையே அரையில் அணியும் ஆடையாகக் கொண்டும், மேலும் ஸகல விதமான ஆசைகளையும் போகங்களையும் தியாகம் செய்து நிராசையுட

னிருப்பவர்தான் உண்மையில் ஸுகமனுபவிக்கிருர். அவருக்கு நிகரான ஸுகத்தை அடைபவர் உலகில் பிறரில்லை.

**அரும்பதவுரை :**

அமளி - படுக்கை. மானுரி - மான்தோல். தனரை - தன் இடுப்பு. போகம் - உலக இன்பங்களை நுகர்தல். அடைவதில் - அடைவதில்லை. நிகரும் - ஒப்பாக.

(19)

**யோகம் செயினும் போகம் கொளினும்**
**கூடுறவேயல தேகனுறையினும்**
**நெஞ்சம் பரமனில் நிலைகொள உறுவன்**
**இன்பம் இன்பம் இன்பம் தானே. (கோவிந்)**

**பொழிப்புவர :**

யோகம் புரிவதில் மகிழ்பவனுக இருப்பினும், போகங்களை நுகர்வதில் மகிழ்பவனுக இருப்பினும், பிறருடன் கூடிவாழ்வதில் மகிழ்பவனுக இருப்பினும், ஏகாந்தமாக வாழ்பவனுக இருப்பினும், எவனுடைய மனமானது பரம் பொருளான ப்ரஹ்மத்தினிடத்தில் லயித்திருக்கிறதோ, அவனே மிகுந்த இன்பத்தை அடைகிருன்.

**அரும்பதவுரை :**

கூடுறவு - கூட்டுறவு. ஏகன் - தனியனுக. உறையினும் - வாழ்ந்தாலும். உறுவன் - அடைவான்.

(20)

பகவத் கீதையொர் சிறிதோதுமவன்
பனிநீர்க்கங்கையொர் துளிபருகுமவன்
பரமன்திருமா லடிபரவுமவன்
பயமுறவேண்டா இயமன் கலகம். (கோவிந்)

**பொழிப்புரை :**

எவன் ஸ்ரீபகவத் கீதையை சிறிதளவாவது ஓதுகின்றானோ, எவன் புனிமான கங்கையின் ஒரு துளி நீரையாவது பருகுகிறானோ, எவன் முரனை வதைத்த ஸ்ரீமாதவனை ஒரு முறையாவது உள்ளன்புடன் வழி படுகிறானோ, அவனுக்கு யமனால் எவ்விதத் தீங்கும் விளையாது.

(21)

மீண்டும் பிறவி மீண்டும் சாவு
மீண்டும்தாயின் கருவில்தாவு
தாண்டரிகரையில் சம்சாரக்கடல்
கண்ணவெனைக்கா தண்ணளிவைத்தாள். (கோ)

**பொழிப்புரை :**

மீண்டும் பிறப்பு, மீண்டும் சாவு, மீண்டும் தாயின் கருப்பத்தில் வாஸம்; தாண்டுவதற்கு அரிதானதும், கரையில்லாததுமான இந்த ஸம்சாரம்

என்னும் கடலிலிருந்து கிருபைகூர்ந்து என்னைக் காப்பாற்று, ஏ முரனை வதைத்த கண்ணா !

**அரும்பதவுரை :**

*தாவு - இடம், வாசம். (திசைச் சொல்). தாண்டரி - தாண்டுவதற்கு அரியது. கரையில் - கரையில்லாதது. கண்ண - ஏ, கண்ணா. எனைக்கா - என்னைக் காப்பாற்று. தண்ணளி - குளிர்ந்த கருணை.*

(22)

**பாதைகிடக்கும் கந்தையினுடைகொள்**

**பாவம்புண்ணிய மறுநெறியுங்கொள்**

**யோகந்தனிலாழ் சிந்தைகொள்யோகி**

**பாலன்பித்தன் போலமகிழ்வான். (கோவிந்)**

**பொழிப்புரை :**

*வீதியில் கிடக்கும் கந்தைத்துணியையே ஆடை யாகத் தரித்தவரும், புண்ணியம் பாவம் இவ் விரண்டும் அற்ற மார்க்கத்தில் இருப்பவரும், யோகத் தில் ஆழ்ந்திருக்கும் சிந்தையுடையவருமான யோகி யானவர் பாலனையும் பித்தனையும் போல மகிழ்வடைந் திருப்பார்.*

''உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங் கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே

**விடையேறு மீசர் திருநாம முண்டிந்த மேதினியில்**
**வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன**
**வான்பிறைக்கே."**

என்ற ஸ்ரீ பட்டினத்தார் பாடல் காண்க.

*(23)*

**பயனே அற்றது கனவை நிகர்ப்பது**
**உலகினை நீத்திடு உறுவதென் நானெது**
**யவனீ என்அனை யார் எந்தையுமார்**
**எனுமிவை நீபரி சீலனை செய்வாய். (கோவிந்)**

எவ்விதமான பயனும் இல்லாத கனவைப், போன்ற (நிலையற்றதும் மாயையுமான) உலகநுகர்ச்சி அனைத்தையும் உதறிவிடு: நான் யார்? நீ யார்? இங்கு வந்தது எப்படி? என் தாய் யார்? என் தந்தை யார்? இவைகளை நீ பரிசிலனை செய்வாயாக.

**அரும்பதவுரை:**

நிகர்ப்பது - போன்றது. நீத்திடு - துறந்துவிடு. உறுவதென் - உற்றது எப்படி. நானெது - நான்யார். அனை - அன்னை. எந்தை - என் தகப்பன். யவனீ - நீ யார்.

*(24)*

**பிறவிலும் நம்மிலும் உறைபவன் விண்டே**
**பொறுமை யிலாய்வீண் சினமேன் கொண்டாய்**
**பேதம் விளை அஞ் ஞானம் களைவாய்**
**யாவிலு மான்மா தானே உள காண். (கோவிந்)**

**பொழிப்புரை :**

நம் இருவரிடத்திலும் (என்னிடத்தும் உன்னிடத்தும்) மற்ற இடங்களிலும் எங்கும் ஸ்ரீ விஷ்ணு பகவானே வியாபித்திருக்கிறார். அங்ஙனமிருக்க நீ பொறுமையற்றவனாக என்மீது ஏன் வீணாகக் கோபம் கொள்கிறாய்? பேதத்தை உண்டாக்கும் அஜ்ஞானத்தை அகற்றிவிடு. எல்லாப் பொருள்களிலும் ஆன்மசொரூபமே (தன் ஸ்வரூபமே) இருப்பதைக் காண்பாயாக.

**அரும்பதவுரை :**

விண்டு - ஸ்ரீவிஷ்ணு பகவான். சினம் - கோபம். உள - இருக்கின்றது.

(25)

**பகைவன் நண்பன் புதல்வன் உறவே**
**சமரம் அமைதி எனவே கருதேல்**
**விரைவில் விண்டுவின் தன்மை விரும்பின்**
**சகலம் சமமாக் கொண்டிரு நம்பி. (கோவிந்)**

**பொழிப்புரை :**

பகைவனென்றும், நண்பனென்றும், புத்திரனென்றும் உறவினனென்றும், சண்டையென்றும், அமைதியென்றும் கருதி எதுவும் செய்யாதே. சீக்கிரமாக விஷ்ணுத்துவத்தை அடைய நீ விரும்பினால் எல்லாம் ஸமமானவை என்ற எண்ணத்தைக் கொண்டிருப்பாயாக.

**அரும்பதவுரை :**

புதல்வன் - மகன். உறவு - பந்து. சமரம் - சண்டை. விண்டுவின் தன்மை - விஷ்ணுத்துவம்.

(26)

**காமம் க்ரோதம் லோபம் மோகம்**
**களைநான் யாரான் மவிசாரணை செய்**
**ஆன்மப் பொருள்தே ருமூடர் சம்-**
**சாரத்தளறில் நீள்துன் புறுவர். (கோவிந்)**

**பொழிப்புரை :**

காமம், குரோதம், லோபம், மோஹம் இவைகளை அகற்றிவிடு. நான் யார் என்ற ஆன்ம விசாரணை செய்துகொள். ஆத்ம ஞானம் அறிந்து கொள்ளாதவர்கள் மூடர்களாவர். அவர்கள் ஸம்சாரமென்னும் நரகத்தில் கட்டுண்டு நெடுங்காலம் துன்பத்தை அனுபவிப்பார்கள்.

**அரும்பதவுரை :**

களை - அகற்று. அளறில் - (அளற்றில்) நரகத்தில். நீள் - நீண்ட காலம்.

(27)

**கீதைசகஸ்ர நாமம்ஓது**
**திருமகள்பதியடி தினமும் கருது**
**சாதுஜனங்களின் நேயம்கொள்வாய்**
**தனமேவறியவர் மகிழ்வுறஈவாய். (கோவிந்)**

**பொழிப்புரை :**

ஸ்ரீபகவத் கீதையையும், ஸ்ரீவிஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்களையும் ஸதா ஓதிக்கொண்டிரு. ஸ்ரீலக்ஷ்மி பதியின் திருவடிகளை எப்போதும் தியானம் செய்து கொண்டிரு. ஸாது ஜனங்களின் நேயத்தை மனமார விரும்பி நாடு. ஏழைகள் மகிழ்வுறும்படி பொருளை வழங்கு.

**அரும்பதவுரை :**

திருமகள்பதி - ஸ்ரீமகாவிஷ்ணு (ஸ்ரீலக்ஷ்மியின் நாதன்). நேயம் - நட்பு. வறியவர் - ஏழைகள். ஈவாய் - தானம் செய்.

(28)

**மகளிர்போகம் மகிழ்வாலாகும்**

**பிறகே தேகம் உறுமே ரோகம்**

**மரணம்உறுதி அறியும் உலகே**

**பினரும் பாவச் செயலறுகிலரே. (கோவிந்)**

**பொழிப்புரை :**

பெண்ணுடன் கலவியானது ஸுகமாகச் செய்யப் படுகிறது. ஆனால், அந்தோ, பிற்காலத்தில் உடலில் வியாதி உண்டாகிறது. உலகில் மரணம் நிச்சயம் என்பது அறியப்பட்டாலும் பாவம் செய்வதை விடுகிறார்இல்லையே!

"காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென்
கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட
தூதென் றெண்ணமற் சுகமென்று நாடுமித் துர்ப்புத்தியை
ஏதென் றெடுத்துரைப் பேனிறை வாகச்சி யேகம்பனே."

என்று ஸ்ரீ பட்டினத்தடிகளார் பாடல் காண்க.

மாதர் யமனும் அவர்விழியே வன்பாசம்
பீதிதரும் அல்குல் பெருநரகம்—ஓதிலதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு.

என்ற திருப்போரூர்ச் சந்நிதிமுறைப் பாடல் காண்க.

அரும்பதவுரை :

மகளிர் - பெண்கள். ரோகம் - நோய். பினரும் - பின்னரும் (செய்யுள் விகாரம்).

அறுகிலர் - விடுகிறாரில்லை.

(29)

செல்வத்தாலொரு பயனும் இலதே
சற்றும் சுகமே இலை சத்தியமே
செல்வர் தனையர் தமையும் வெருவும்
செய்தி உலகின் முறைநித் தியமே. (கோவிந்)

**பொழிப்புரை :**

செல்வத்தால் எவ்விதமான பிரயோஜனமும் என்றும் இல்லை என்பதை உணர்ந்துகொள். செல்வத்தால் சிறிதளவு ஸுகமும் இல்லை, இது ஸத்தியம்: செல்வந்தர்கள் தமது பிள்ளைகளைக்கூடக் கண்டு அஞ்சுவார்கள். இது என்றும் உலக வழக்கு.

**அரும்பதவுரை :**

தனையர் - பிள்ளைகள். வெருவும் - அஞ்சுவார்கள். உலகின்முறை - உலகரீதி.

*(30)*

**பொருளுள திலதெது தெரியவிசாரம்**

**பிராணாயாமம் பிரத்யாஹாரம்**

**நெறிசேர் செபமினை சமாதி முறையை**

**நினைவினிலதிகவ னமாகநீவை. (கோவிந்)**

**பொழிப்புரை :**

நித்தியப்பொருள் எது, அநித்தியப்பொருள் எது என்று தெரிந்துகொள்ளும் விசாரணையையும், யோக சாஸ்திரப் பிரகாரமுள்ள ஜபத்துடன் கூடிய ஸமாதி முறையையும், மிகவும் கவனமாக நீ சித்தத்தில் நிறுத்து.

இயமம், நியமம், ஆஸநம், பிராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என யோகமானது எட்டு அங்கங்களை உடையது. யோகத்தை

அப்யஸிக்கவேண்டிய மார்க்கத்தையும் அதில் மிருந்த ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டிய அவசியத்தையும் இங்கு எடுத்துரைக்கிருர்.

**அரும்பதவுரை :**

பொருள் உளதெது - நித்தியப் பொருள் எது. பொருள் இலதெது - அநித்தியப் பொருள் எது. விசாரம் - விசாரணை. பிராணுயாமம் - மூச்சுப் பயிற்சி, (பூரகம், ரேசகம், கும்பகம் என்பன). பிரத்யாஹாரம் - எல்லா இந்திரியங்களையும் விஷயங்களினின்றும் விலக்குதல் (ஐந்தவித்தல் என்பார் திருவள்ளுவர்). நெறிசேர் - யோக சாஸ்திர விதிகளை அனுஸரித்த. செபமிணை சமாதி ஜபத்துடன் கூடிய ஸமாதி.

**'' அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும் அவத்தை**
**யைந்தும்**
**விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்று**
**கண்டேன்**
**வட்டாகிச் செம்மதிப் பாலூற லுண்டு மகிழ்ந்திருக்க**
**எட்டாத பேரின்பம் என்னை விழுங்கி இருக்கின்றதே.''**

என்ருர் ஸ்ரீ பட்டினத்தடிகளார்.

*(31)*

**குருபததாமரை பரவுதி உருகி**
**உறுசமுசாரமொர் தனை நீகளைதி**
**முறையுறமனமிந் தியமிவை சிறைவை**
**இருதயமுறையுந் தேவினை அறிவை. (கோவிந்)**

பொழிப்புரை :

ஸ்ரீ குருநாதருடைய தாமரைத் திருவடிகளை, மனம் உருகி பக்தியுடன் வழிபடு: ஸம்சாரமென்னும் பந்தத்திலிருந்து விரைவில் விடுவித்துக்கொள் : சாஸ்திர முறைகளின்படி, மனத்தையும், பஞ்சேந்திரியங்களையும் அடக்கிவிடு : உன்னுடைய ஹிருதயத்தில் இருக்கும் பரம்பொருளை நீ காண்பாய்.

அரும்பதவுரை :

குருபதம் - குருவின் பாதங்கள். பரவுதி - வழிபடு. களைதி - களைந்துவிடு. இந்தியம் - இந்திரியம் (பஞ்சேந்திரியங்கள்) சிறைவை - சிறைப்படுத்து, அடக்கிவிடு. தேவு - தெய்வம். அறிவை - அறிகுவாய்.

'' மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும்.''

என்ற நாலடியார்ப் பாடல் பஞ்சேந்திரியங்களை அடக்குபவன் மோக்ஷம் எய்துவன் என்று உரைக்கிறது. ஈசுவர அவதாரமாகிய ஸ்ரீஆதிசங்கரபகவத பாதர்கள், தமது குருநாதராகிய ஸ்ரீகோவிந்த பகவத் பாதர்களையும், ஸர்வேச்வரனாகிய ஸ்ரீகோவிந்தனையும் ஒருங்கு துதிக்கிறார் இந்த அற்புதமான ஸ்துதியில். குருவானவர் ஸாக்ஷாத் பிரம்மமே அன்றோ ?

**"குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணுர்ஃ குருர் தேவோ மஹேஸ்வரஃ**
**குருஸாக்ஷாத் பிரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுருவே நமஃ"**

என்றதன் மூலம் ஆண்டவன் வேறு குரு வேறு அல்ல என்று அறிகின்றோம். குருநாதனை வணங்குவதன் மூலம் இறைவனையே வழிபடுகிறோம். ஆகவே குருநாதராகிய ஸ்ரீஆசாரிய ஸ்வாமிகளை மன முருகி வழிபட்டு நற்பேறு எய்துவோமாக.

## மொழி பெயர்ப்பாசிரியன் அவையடக்கம்

**ஈசன்காலடி ஆசானுல்அணி**
**மாசில்வடமொழி தேசில் மிளிர் துதி**
**தாசன் அறிவிலி ஆசையினிதுமொழி**
**காசில்புகழ்அரி நேசம் கொளவழி.**

**பொழிப்புரை :**

காலடி க்ஷேத்திரத்தில் திருவவதரித்த எம் குருநாதர், மாசிலாத ஸம்ஸ்கிருத பாஷையில், ஒளியால் பிரகாசிக்கும் ரத்நங்களாய கவிகள் கொண்ட இந்த ஸ்துதிமாலையை ஸ்ரீ பகவானுக்கு அணிவித்தார். தாஸனுகிய அறிவற்ற அடியேன் ஆசையின் காரணமாக அதனை இங்ஙனம் மொழிந்துள்ளேன். (தமிழில் மொழி பெயர்த்துள்ளேன்.) ஏனெனில், பகவான் ஸ்ரீவிஷ்ணுவின்பால் பக்தியை யான் கொள்ளவும், அவன் கிருபையை அடையவும் வழி பிறக்கும் என்பதால்.

ஆசாரியர், ஈசனுடைய காலடியில் அணிவித்தார் என்றலுமாம். தாஸனென்பது. ஈசன் ஹரியின் தாஸன் என்றும், ஆசானின் தாஸன் என்றும் பொருள் தரும். ஆசை ஒன்றே காரணமாக மொழிந்தேன் என்றதால் வேறு எவ்வித தகுதியும் இலன் என்பது போதரும். ''ஆசை பற்றி அறையலுற்றேன் மற்றிக் காசில் கொற்றத்து ராமன் கதையரோ'' என்றார் கவிச்சக்கரவர்த்தியாகிய ஸ்ரீ கம்பநாடர்.

அரும்பதவுரை :

மாசில் - குற்றமற்ற. தேசில் - பிரகாசத்தினல். மிளிர் - ஒளிரும். காசில்புகழ் - குற்றமற்ற புகழ். அரி - ஸ்ரீவிஷ்ணுபகவான். நேசம் - பக்தி, கிருபை.

சுபம்.

श्रीः

श्री शंकरभगवत्पादविरचितं

# ॥ श्री भजगोविन्द (मोहमुद्गर) स्तोत्रम् ॥



SRI BHAKTA SAMAJAM

WEST MAMBALAM, MADRAS - 33.

# ॥ श्री भजगोविन्दम् ॥

मोहमुद्गरः

भज गोविन्दं भज गोविन्दं
भज गोविन्दं मूढमते ।
संप्राप्ते संनिहिते काले
नहि नहि रक्षति डुकृञ्करणे ॥ १ ॥

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
பஜ கோவிந்தம் மூடமதே ।
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ்கரணே ॥ 1 ॥

मूढ जहीहि धनागमंतृष्णां
कुरु सद्बुद्धिमनसिवितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तं
वित्तं तेन विनोदय चित्तम् ॥ २ ॥

மூட ஜஹீஹி தநாகமத்ருஷ்ணாம்
குரு ஸத்புத்திம் மநஸி வித்ருஷ்ணாம் ।
யல்லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ॥ 2 ॥

नारीस्तनभरनाभीदेशं
दृष्ट्वा मा गा मोहावेशम् ।
एतन्मांसवसादिविकारं
मनसि विचिन्तय वारं वारम् ॥ ३ ॥

நாரீஸ்தநபரநாபீதேசம்
த்ருஷ்ட்வா மா கா மோஹாவேசம் |
ஏதந்மாம்ஸ வஸாதிவிகாரம்
மநஸி விசிந்தய வாரம் வாரம் || 3 ||

नलिनीदलगतजलमतितरलं
तद्वज्जीवितमतिशयचपलम् ।
विद्धि व्याध्यभिमानग्रस्तं
लोकं शोकहतं च समस्तम् ॥ ४ ॥

நலிநீதலகதஜலமதிதரலம்
தத்வஜ்ஜீவிதமதிசயசபலம் |
வித்தி வ்யாத்யபிமாநக்ரஸ்தம்
லோகம் சோகஹதம் ச ஸமஸ்தம் || 4 ||

यावद्वित्तोपार्जनसक्त-
स्तावन्निजपरिवारो रक्तः ।
पश्चाज्जीवति जर्जरदेहे
वार्ता कोऽपि न पृच्छति गेहे ॥ ५ ॥

யாவத் வித்தோபார்ஜநஸக்த-
ஸ்தாவந்நிஜபரிவாரோ ரக்தঃ |
பஶ்சாஜ்ஜீவதி ஜர்ஜரதேஹே
வார்த்தா கோऽபி ந ப்ருச்சதி கேஹே । 5 ||

यावत्पवनो निवसति देहे
तावत् पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन् काये ॥ ६ ॥

யாவத் பவனோ நிவஸதி தேஹே
    தாவத் ப்ருச்சதி குசலம் கேஹே ।
கதவதி வாயௌ தேஹாபாயே
    பார்யா பிப்யதி தஸ்மிந் காயே || 6 ||

बालस्तावत् क्रीडासक्त-
    स्तरुणस्तावत् तरुणीसक्तः ।
वृद्धस्तावच्चिन्तासक्तः
    परमे ब्रह्मणि कोऽपि न सक्तः ॥ ७ ॥

பாலஸ்தாவத் க்ரீடாஸக்த-
    ஸ்தருணஸ்தாவத் தருணீஸக்தஃ ।
வ்ருத்தஸ்தாவச்சிந்தாஸக்தஃ
    பரமே ப்ரஹ்மணி கோऽபி ந ஸக்தஃ || 7 ||

का ते कान्ता कस्ते पुत्रः
    संसारोऽयमतीव विचित्रः ।
कस्य त्वं कुत आयात-
    स्तत्त्वं चिन्तय यदिदं भ्रातः ॥ ८ ॥

கா தே காந்தா கஸ்தே புத்ரஃ
    ஸம்ஸாரோऽயமதீவ விசித்ரஃ ।
கஸ்ய த்வம் குத ஆயாத-
    ஸ்தத்வம் சிந்தய யதிதம் ப்ராதஃ || 8 ||

सत्सङ्गत्वे निःसङ्गत्वं
    निःसङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलितत्त्वं
    निश्चलितत्त्वे जीवन्मुक्तिः ॥ ९ ॥

புநராபி ஜநநம் புநராபி மரணம்
புநராபி ஜநநீஜடரே சயநம் ।
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயாபாரே பாஹி முராரே ॥ 21 ॥

रथ्याकर्पटविरचितन्थः
पुण्यापुण्यविवर्जितपन्थः ।
योगी योगनियोजितचित्तो
रमते बालोन्मत्तवदेव ॥ २२ ॥

ரத்யாகர்படரசிதகந்தஃ
புண்யாபுண்யவிவர்ஜிதபந்தஃ ।
யோகீ யோகநியோஜித சித்தோ
ரமதே பாலோந் மத்தவதேவ ॥ 22 ॥

कस्त्वं कोऽहं कुत आयातः
का मे जननी को मे तातः ।
इति परिभावय सर्वसारं
विश्वं त्यक्त्वा स्वप्नविचारम् ॥ २३ ॥

கஸ்தவம் கோSஹம் குத ஆயாதஃ
கா மே ஜநநீ கோ மே தாதஃ ।
இதி பரிபாவய ஸர்வமஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்னவிசாரம் ॥ 23 ॥

त्वयि मयि चान्यत्रैको विष्णु-
र्व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।
सर्वस्मिन्नपि पश्यात्मानं
सर्वत्रोत्सृज भेदज्ञानम् ॥ २४ ॥

த்வயி மயி சாந்யத்ரைகோ விஷ்ணுர்
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணுः ||
ஸர்வஸ்மிந்நபி பச்யாத்மாநம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேதஜ்ஞாநம் || 24 ||

शत्रौ मित्रे पुत्रे बन्धौ
मा कुरु यत्नं विग्रहसंधौ ।
भव समचित्तः सर्वत्र त्वं
वाञ्छस्यचिराद्यदि विष्णुत्वम् ॥ २५ ॥

சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்நம் விக்ரஹஸந்தௌ |
பவ ஸமசித்தঃ ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத்யதி விஷ்ணுத்வம் || 25 ||

कामं क्रोधं लोभं मोहं
त्यक्त्वात्मानं भावय कोऽहम् ।
आत्मज्ञानविहीना मूढा-
स्ते पच्यन्ते नरकनिगूढाः ॥ २६ ॥

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாத்மாநம் பாவய கோऽஹம் ।
ஆத்மஜ்ஞாந விஹீநா மூடா-
ஸ்தே பச்யந்தே நரகநிகூடா: || 26 ||

गेयं गीतानामसहस्रं
ध्येयं श्रीपतिरूपमजस्रम् ।
नेयं सज्जनसङ्गे चित्तं
देयं दीनजनाय च वित्तम् ॥ २७ ॥

கேயம் கீதாநாமஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதிரூபமஜஸ்ரம் ।
நேயம் ஸஜ்ஜநஸங்கே சித்தம்
தேயம் தீநஜநாய ச வித்தம் || 27 ||

सुखतः क्रियते रामाभोगः
पश्चाद्धन्त शरीरे रोगः ।
यद्यपि लोके मरणं शरणं
तदपि न मुञ्चति पापाचारम् ॥ २८ ॥

ஸுகத: க்ரியதே ராமாபோக:
பஶ்சாத் ஹந்த சரீரே ரோக: ।
யத்யபி லோகே மரணம் சரணம்
ததபி ந முஞ்சதி பாபாசாரம் || 28 ||

अर्थमनर्थं भावय नित्यं
नास्ति ततः सुखलेशः सत्यम् ।
पुत्रादपि धनभाजां भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥ २९ ॥

அர்த்தமநர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத: ஸுகலேச: ஸத்யம் ।
புத்ராதபி தநபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: || 29 ||

प्राणायामं प्रत्याहारं
नित्यानित्यविवेकविचारम् ।
जाप्यसमेतसमाधिविधानं
कुर्ववधानं महदवधानम् ॥ ३० ॥

ப்ராணயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்யவிவேக விசாரம் ।
ஜாப்யஸமேதஸமாதிவிதானம்
குர்வவதானம் மஹதவதானம் || 30 ||

गुरुचरणाम्बुजनिर्भरभक्तः
संसारादचिराद्भव मुक्तः ।
सेन्द्रियमानसनियमादेव
द्रक्ष्यसि निजहृदयस्थं देवम् ॥ ३१ ॥

इति श्रीमच्छङ्करभगवत्पादविरचितं
भजगोविन्द (मोहमुद्गरः) स्तोत्रं संपूर्णम्

குருசரணம் புஜநிர்ப்பரபக்தঃ
ஸம்ஸாராதசிராத்பவ முக்தঃ ।
ஸேந்த்ரியமானஸநியமாதேவ
த்ரக்ஷ்யஸி நிஜஹ்ருதயஸ்தம் தேவம் || 31 ||

இதி ஸ்ரீமச்சங்கர பகவத்பாத விரசிதம்
பஜகோவிந்த (மோஹமுத்கரம்)
ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்

---

லக்ஷ்மி விஜயம் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5

## ஸ்ரீபக்தஸமாஜம் வெளியீடுகள்

1. ஸ்ரீஸௌந்தர்யலஹரி
2. ஸ்தோத்ர கதம்பம்
3. ஸ்ரீசங்கர உபதேச ஸ்தோத்ரங்கள்
4. ஸ்ரீ ப்ரமராம்பாஷ்டகமும், ஸ்ரீ சிவபுஜங்க ஸ்தோத்ரமும்
5. ஸ்ரீ சாரதா புஜங்க ஸ்தோத்ரம் (அச்சில்)
6. ஸ்ரீ பஜகோவிந்தம் (மூலமட்டும்)
7. ஸ்ரீ பஜகோவிந்தம் (தமிழாக்கம் அச்சில்)
8. ஸ்ரீபாதுகா பஞ்சரத்னஸ்தவம் (விரிவான தமிழுரையுடன் கூடியது)
9. Garland of Divine Sparks
10. வர்ண தர்மம்